[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

**II.—PRIVILEGE MATTER *re.* DELAY IN SENDING OF A NOTIFICATION BY THE INDUSTRIES, LABOUR AND CO-OPERATION DEPARTMENT.**

MR. SPEAKER : The hon. Member Sri M. Kalyanasundaram, has given notice of a matter of privilege against the Additional Secretary, Industries, Labour and Co-operation Department, Government of Madras. He will now speak.

SRI M. KALYANASUNDARAM : Mr. Speaker, Sir, as you are aware that in many of the legislations passed by this House provision is there for the issue of notifications and rules. Invariably all the notifications and rules issued under these legislations are to be placed on the table of the House. In a small number of cases it is mandatory, that is, the rules and notifications will take effect only if the House approves them. In a large number of cases it is only directory. But in both the cases it is imperative that all the rules framed under these legislations and the notifications issued must be placed on the table of the House and they must be placed as early as possible. This question was considered by the Subordinate Legislation Committee and they also have expressed the view that a limit of two months' time will be more than adequate for placing these notifications and rules on the table of the House. But I have been observing that there is inordinate delay in placing the rules and also notifications and it takes months after they are published even in the Gazette. But there is an instance where the notifications issued had been sent for placing on the table of the House after the notifications had ceased to have any force. I do not mind what the consequences are. The Hon. Minister may say that it is not of much consequence. That is a different matter. But why there should be failure? It amounts to bringing this House into contempt. The departments treat this House very lightly and they think that the notifications and rules issued under the various legislations can be despatched to this House as conveniently as possible. So, that attitude must be checked and that attitude is growing and persisting in several departments. It is unfortunate that the Industries Department is caught in this case but it does not mean that other departments are doing their duties properly.

MR. SPEAKER : Now the hon. Member is concerned only with the Industries Department.

SRI M. KALYANASUNDARAM : Yes, Sir. You are the guardian of the privileges of this House.

MR. SPEAKER : Yes, I agree.

SRI M. KALYANASUNDARAM : The notification under reference is G.O. No. 1116, I.L.C., dated 27th February 1962. It has been published in the *Fort St. George Gazette* on 14th March 1962. The notification itself says that the Government Order shall remain in force up to and inclusive of 31st March 1962.

* கனம் திரு. எம். பக்தவத்சலம் : கனம் சபாநாயகர் அவர்களே, நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கனம் அங்கத்தினர்

30th June 1962] *[திரு. எம். பக்தவத்சலம்]*

திரு. கலியாணசுந்தரம் அவர்கள் எழுப்பிய இந்தப் பிரச்னை என்னுடைய கவனத்திற்கு இப்பொழுதுதான் வந்தது. அதை விளக்குவது அவசியந்தான். என்றாலும், அதைக் குறித்து நிலைமையை எடுத்து விளக்கக்கூடிய நிலையில் இன்றைய தினம் நான் இல்லை. பிரச்னையைப் பற்றிப் பரிசீலனை செய்து தான் நான் பதில் சொல்ல வேண்டும். பட்ஜெட் விவாதத்தின்போது, 'லேபர் டிமாண்டு' என்ற தலைப்பின் கீழ் விவாதிக்க ஒரு நாள் ஒதுக்கப்படும் என்று நான் நினைக்கிறேன். அப்பொழுது இதைப் பற்றி விரிவாகக் கவனம் செலுத்தலாம்.

எனினும் இந்தப் பிரச்னையை உரிமைப் பிரச்னையாக ஒரு அதிகாரி மீது எடுத்துக் கொள்வது சரியல்ல என்றுதான் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் லேபர் பற்றிய விவாதத்தின்போது இது விவாதிக்கப்பட்டு அதற்கு மேல் கனம் அங்கத்தினரோ அல்லது தாங்களோ இதை உரிமைப் பிரச்னையாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்தால் அதைப் பின்னால் முடிவு செய்யலாம். ஒன்று இச்சமயத்தில் சொல்ல விரும்புகிறேன். எந்த இலாகாவினரும், எந்த அதிகாரியும் இந்த மன்றத்தை அலட்சியமாகக் கருதுகிறார்கள் என்று சொல்வது சரியல்ல, முறையல்ல. அதை நான் மறுக்கிறேன். ஆனால் நிர்வாகத் தோரணையில் ஏதாவது தாமதம் ஏற்படலாம். அப்படி தாமதம் ஏற்பட்டால், அதை 'அலட்சியப்படுத்துகிறார்கள்' என்று சொல்வது சரியல்ல. ஆகவே இந்த உரிமைப் பிரச்னையை இப்போது விவாதிக்காமல் பின்னால் லேபர் டிமாண்டின்போது எடுத்துக் கொள்ளலாம் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** உரிமைப் பிரச்னையை விவாதிக்கவில்லை. உரிமைப் பிரச்னை என்னவென்ற விஷயத்தைத்தான் சொல்கிறேன். அதைப்பற்றி விவாதிக்க சபாநாயகர் அவர்களின் அனுமதி வேண்டும். சபாநாயகர் அவர்கள் இப்பொழுது கொடுத்திருக்கக்கூடிய அனுமதி பிரச்னையைச் சொல்வதற்குத்தான். இதில் உள்ள குறைகளை நிவர்த்திக்கவேண்டுமென மான்யக் கோரிக்கை மீது சொல்லலாம். இது, சபைக்கு அவ்வப்போது அனுப்ப வேண்டியவைகளை அனுப்பி அங்கத்தினர்களுக்கு கொடுக்கவேண்டுமென்றுள்ள பிரச்னை. அதனால் ஏற்படக்கூடிய குறைகளுக்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

MR. SPEAKER: The hon. member may now confine bis remarks to the delay in placing this notification on the table of the House so that he need not take up much of the time of the House.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** பீடித் தொழிலாளர்களுடைய சட்டத்தின்கீழ் பிறப்பிக்க வேண்டிய ஒரு அறிக்கை, இது. அந்த அறிக்கை மார்ச் 31-ம் தேதி வரையில்தான் அமுலில் இருக்க வேண்டியது. 31-ம் தேதிக்கு முன்னதாகவே இந்த சபையின் முன்னர் அது வைக்கப்பட்டிருந்தால், இந்த சபை அங்கத்தினர்கள் அதன்மீது ஏதாவது திருத்தங்கள் கொடுக்கவேண்டிய

அவசியம் இருந்தால் திருத்தங்கள் கொடுத்திருக்க முடியும். அது பற்றி ஆட்சேபிப்பதற்கு அவசியம் இருந்திருந்தால் ஆட்சேபித்திருக்க முடியும். ஆனல் காலாவதியான பிறகு இன்றுதான் அது இந்தச் சபைக்கு வருகிறது. தபாலில் அனுப்பப்பட்டது சில தினங்களுக்கு முன்னர்; தபாலிலேயே இதுபற்றி சபாநாயகர் அவர்களுக்கும் அனுப்பி வைத்து விட்டேன். இன்று இது முக்கியமில்லாமலிருக்கலாம். ஆனல் இதன் மீது திருத்தங்கள் கொடுக்க வேண்டுமென்று அங்கத்தினர்கள் விரும்பினல் காலாவதியான பிறகு எப்படி திருத்தம் கொடுப்பது? அதனல் என்ன பயன் ஏற்படும்? அது, கெஸட்டில் போட்டவுடன் அமுலுக்கு வருவதாகும்; சபையில் வைத்த பிறகு அமுலுக்கு வருவதல்ல. கெஸட்டில் போட்டால் போதும். ஆகவே இலாகா ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். அந்த ஒழுங்கீனத்தைத்தான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். ஆனல் நான் அப்படிச் சொல்வது முறையல்ல என்று அமைச்சர் அவர்கள் கூறினர்கள். அதிகாரிகளின் அல்லது நிர்வாகத் தவறுகளுக்கு அமைச்சர்தான் பொறுப்பாளி—சட்டசபை சம்பிரதாயப்படி. அவர்களை கைவிடக் கூடாதுதான். அவர்கள் செய்யவில்லை என்று மறுப்பது சரியல்ல. அவர்கள் செய்தது தவறு என்றல் அப்படி இனிச் செய்யாது பார்த்துக் கொள்கிறோம் என்று பொறுப்பேற்றுக் கொள்வது சரியே தவிர அப்படி எடுத்துக் காட்டுவது சரியல்ல என்று சொல்வது முறையல்ல. ஆக, இதை உரிமைப் பிரச்னையாக எடுத்து மற்ற இலாகாக்கள் தவறு செய்யாமல் இருக்க இது ஒரு உதாரணமாக இருக்கவேண்டுமென்று சமர்பித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : Does the Hon. Minister for Finance wish to say anything?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

MR. SPEAKER : We can take this up on the date on which the Labour Demand comes up before the House.

*திரு. மீ. கலியாணசுந்தரம் :* உரிமைப் பிரேரேபணை அப்படியேயிருக்கட்டும். கனம் சபாநாயகர் அவர்கள் பரிசீலனை செய்யட்டும். அவசியம் என்று கருதினல் அபிப்பிராயம் கொடுக்கலாம்.

MR. SPEAKER : We shall consider it when we take up the Labour Demand.

## III.—ADJOURMENT MOTION *RE* : POWER-CUT IN THE STATE.

MR. SPEAKER : I have received notice of an adjournment motion from the hon. Member Sri M. Kalyanasundaram for the purpose of discussing a matter of urgent public importance, viz., the situation arising out of the power-cut enforced all over the State resulting in partial closure of a number of factories subjecting a large number of industrial workers to lay-off and loss of earnings. I now call upon the hon. Member to state his case.